தொடர்: நிறைமதி மறைமதியாகும். அப்படியே சென்றுமா? மீண்டும் நிறைமதியாகும் ★
எவ்வண்ணம் இருந்த அவனுள்ளம் இன்று இவ்வண்ணம் ஆயிற்று. அறிவும் அன்புமுடையார் செயல்
அழுவைத் தவிர்த்திடா ★ உன் முகத்தின் ஒளி மங்கிவிட்டாத பின்பு நிலம் போல மங்கித்
தோன்றுகின்றதே. ★ ஒரு உழவன் தன் வயலுக்கு மடைவாய் நீர் வருதல் வேண்டும் என்று
கேட்பது உரிமை. மடைவாயும் கண்மாய் நீரை மற்றையோர் வயலுக்கு ஓடாது மறுத்தல் தன்
னுரிமை என்பானாயின் அது மடமை ★ அகவாழ்க்கையாயினும் புறவாழ்க்கையாயினும் தன்னைப்
பேணிக் கொள்ளும் உரிமை போற்றத் தகும். பிறர் நலம் வருந்தவிடத் தடுப்பதும் உரிமையெனின்
அது கொடியபழம். முறை மாறி நடக்காத பெண்ணிடம், அன்பே! நீ மாறி நடப்பது அழகில்லை ★
பலவாறு சொல்லிப் பார்த்துவிட்டேன் என் மனத்தைச் செத்துவிடும்படி செய்வது நன்றன்று ★
பெண்மைக்குப் பொதுவெனப் பேசுகேன். யான் கேட்கும் அன்பிற்கு முறை உண்டா? இல்லை, நான்
அழகில் குறைந்தவனா? இல்லை, இன்பம் கொடுக்கும் ஊடலில் நண்பு ஊடத் தெரியாதவனா? இல்லை
அனைத்து கிடந்து இன்பக் கனியை அழகே வைப்பவனா? என் குற்றம் எவன்! குற்றமடுப்பான்
அடித்துத் திருத்துங்கள். மிதித்தேனும் திருத்துங்கள். உதைத்துத் திருத்துங்கள். என்ன செய்யினும்
பொறுத்து மட்டும் இன்பம் நுகருங்கள். யான் வேண்டுவது நீங்கள் உயிரோடு அகத்து இருக்க
ப் பிறரொடு பெண்மை நயப்பதை நான் வெல்வேன், வெல்வேன். மனைவி இருக்கவும், கணவன்
மற்றொரு பெண்ணை விரும்பினான், பெண்மையை அவன் காமுகன் குற்றமுடையவன் என்று சொல்
லாது. மனைவி அவன் இன்பத்திற்கு ஏற்றவளல்லள்; ஆண்மையை வயப்படுத்தும் பெண் தன்
மை யாவள்; கொண்டவன் குறிப்பறிந்து ஒழுக வாழாதவள்; அதனுள் மற்றொருத்தி வலியார் படு
மாறு தாக்கியவள் என்று மனைவியையே மகளிர் தூற்றுவர். ★ காதல் உணர்ச்சி பிறர்
காட்ட வருவதில்லை. காதலன் காதல் மாறுமாயின், காதலுணர்ச்சியும் ஒரு மணப் பெண்மைக்கு
உரைகத்தே உள்ளது ★ நின் அழகுண்ணும், அழகுசெய்யும், மெய்யாக்கலந்ததும், வாழ்யா
மகவும் என் புகழைப் பழிக்கவல்லியா? ★ ஆதரிக்கும் இடந்தான் அவளுக்குரியம்.
உள்ளங்கையை விட்டுப் புறங்கையை பாயுமா? புறங்கை புறங்கைதான் ★ வாக்குயாது
என்று சொல்வது வாழ்வுடையார் செயலன்று. வந்தால் ஏன்றுக் கொடாதிருப்பது மடமையுடை
யார் செயலன்று. ஆனால் காணப்படாமல் இருப்பதுதான் அறிவுடையார் செயல். இது நாகரிக
மான முறையல்லவா? ★ இன்பம் இது வென்று உணரக் கற்பித்த முதல்வியை வெறுக்
கும் செய்ந்நன்றி கெட்ட மகனோ நான். ★ இவள் பெண்மையை வாழ்த்தக் கண்டோம். பெண்
மை தன்மையை அழிக்கக் கண்டோம். ★ கல்வி கற்கும் போதே கசடறக் கல்லாதான்,
வாழ்வு கசடுடையதாகிவிடும் என்பது தமிழ் நூலோர் துணிபு ★ உள்ளதைச் சொல்லுதல்
இலக்கியமென்றும், உள்ளதின் நல்லதைக் காட்டுவது அறநூல் என்றுமதை ★ சொல்லிச்
சொல்லித்தானே நாமும் இவர்ந்து வளர்ந்தது. கேட்டுக் கேட்டுத்தானே செவியும் மடங்கித்
துளைபட்டது ★ தமிழ்மக்கள் வாழ்வுத் தொகுதிதான் தமிழ் மொழியேயாயினும் தமிழ்மொழி
க்குத் தனித் தொகு வாழ்வுண்டோ! ★ தமிழர்களின் உள்ளத்து நிலையது தமிழின் உயர்வும்
தாழ்வும் ★ கல்லாத மக்களுக்கு மயக்கம் என்பதில்லை. ஏனென்றால் அங்கு அறிவில்லை.
கற்றவர்களுக்கே மயக்கம் உண்டு. ஏனென்றால் அவர் அறிவு தெளிவில்லை ★ ஒருத்
தியைத் திருப்பது நன்மக்களின் பண்பு. மயங்கிய அறிவு தெளிவதற்கும் அத் திருப்பே வே
ண்டும் ★ கூடுதலும் போல ஊடுதலும் இயற்கை ★ நின் கற்புடைய மனைவி இறந்த
பெண்மையெல்லாராலும், தமக்குள் இவள் பழிக்க வில்லையே யென்று வருந்தத் தக்கவள். வாழும்
பெண்டிர் எல்லாராலும் புகழத் தக்கவள். பழக்கும் பெண்டிர் எல்லாராலும் தொழத் தக்க
வள் ★ கற்றவர்கள் மனைவொற்றுமையே எக்காலத்தும் இறந்தது. தனி மனிதனுக்கும்
நாட்டிற்கும் நன்மை பயப்பது ★ புணர்வைப் பிரிவாக்கிப் பிரிவைப் புணர்வாக்குவது உங்
கட்கு அருமையோ? அதன் அறியாக் கண்ணை அழ வைப்பதற்கோ என் மன புகுந்தீர்கள்
★ மணமாக, உடல் மறுவின்றி இம்மங்கை நல்லாளாய் பிறவு செய்யடி ★